சமதர்ம வெளியீடு 1.

# சமதர்மக் கீதங்கள்.

ப. ஜீவானந்தன்.

## சமதர்மம்.

(விருத்தம்)

அறிவினைத் தூண்டாது மலைபோல மூளையை
யமிழ்த்து சாத்திர மெரிப்பீர்
ஆஷாடபூதிகள் பொம்மலாட்டங்களுக்
கடிமையா காது வாழ்வீர்
வறிய குள்ளச் சமூ கந்தருங்கட்டுகளை
மண்ணாய்ப் பொடித்தெறிகுவீர்
வாழவொட்டா தரித்துண்ணும் விஷப்பூச்சி
வண்புரோகித மொழிப்பீர்
மறியலைசெய்து முற்போக்கைத் தடுத்திட்ட
மதமெனும் பாம்பு கொல்வீர்
மனிதரை விழுங்கிடுந் தனி உடைமையாம் பேயை
மண்டையிலடித்து மாய்ப்பீர்
குறியோடு கொள்கையும் புது உலகு காண்பதிற்
கொண்டு நற்றொண்டு செய்வீர்
கோதிலாச் சமதர்ம மோங்குதற்கே யொன்று
கூடிவருவீர் தோழரே.

---

## கொள்கைச் சிறப்பு.

(அன்பே உமைப் பிரிந்தேனே என்ற மெட்டு.)

பொன்போல் கொள்கை பூண்டேனே—
புது வாழ்வினை ருசித் தேனே

இன்பால் உலகினில் தானே
இடர் தீர்க்கும் சமதர்மத் தேனே (பொன்)

தொகையறு.

இளிப்பதும், இரப்பதும், இறப்பதும் தொழிலாளி
என்றிடில் அவமானமே
களிப்பதும் சுகிப்பதும் முதலாளி வாழ்வெனக்
கண்டிடிற்பெரும் ஈனமே.

[பாட்டு]

பாட்டாளி துயர் போ தாதா
பரிதாபம் கரை புர ளாதா
தேட்டாளர்சதி யொழி யாதா
ஜெகமீது சமத்வம்வ ராதா [பொன்]

தொகையறு.

உலகமும் பொருள்களும் மக்களின் சுகபோகம்
ஒளிபெறச் செய்யுமுறுதி
கலகமும் மோசமும் கவலையுந்துயரமும்
கட்டோடு காணுமிறுதி.

[பாட்டு]

வாடாத வாழ்க்கை யுண்டாகும்
வறுமைப் பிணியற்றுப் போகும்
கோடாத சமதர்மத் தாகம்
கொடுக்கும் புதுமையின் போகம். [பொன்]

---

## தொழிலாளர் துயரம்.

(என்ன கொடுமை-எச்சில் பாத்திரமலம்புவோனே
என்ற மெட்டு.)

என்ன கொடுமை—நாம்
எண்ணினும் கண்ணீர் பெருகும்;
ஏழையர் துயரக்கடல் (என்ன)

அன்னமோ வயிறார அருந்தினதில்லை
அடியுதை தொழிலாளர் படுகிறார் தொல்லை
ஆயிரம் ஆண்டுகள் தேய்கிறார் மாய்கிறார்
ஆண்ட நிலை பூண்ட முத
லாளிகள் அசையவில்லை (என்ன)

ஐந்து வயதுடைய மைந்தனும் உழைப்பான்
அஷ்ட மாதக் கர்ப்பிணி அழுதழுதுழைப்பாள்
தந்தையும் ராப்பகல் நொந்துதானுழைப்பான்
சஞ்சலம் தரித்திரங்கள்
மிஞ்சி உழைப்போரைத் தின்னும் (என்ன)

---

## வாழ்வு நிலையுணர்த்தல்.

(ஆருக்குப் பொன்னம்பலம் என்ற மெட்டு)

பல்லவி.

பூச்சி புழுக்களுமே சீச்சியென்றுமிழ்ந்திட
ஆச்சு நம் வாழ்வு தோழனே [பூச்சி]

அநுபல்லவி.

எச்சமனிதரெல்லாம் இறுமாந்து கொழுக்கிறார்
காச்ச மனிதர் நச்சுக் கனியெனப் பழுக்கிறார் [பூச்சி]

சரணங்கள்.

சஞ்சலப் பேய் நம்மைத் தவறாமல் வதைக்குது
தரித்திரப் பேய் வாழ்வை யரித்துச் சிதைக்குது
கொஞ்சமல்ல பசி தினசரி உதைக்குது
கொடுமையை நினைத்திடக்
குலையெல்லாம் பதைக்குது [பூச்சி]

பாடுபடு முத்தமன் அடிமைப் பிராணி
பழுத்த சோம்பல் திருடன் அருந்திருமேனி
கேடுசெய் கயவனோ பிரபல ஞானி
கிட்டும் பணிசுகளைச் சற்றுக் கண் காணி [பூச்சி]

## உலகத் தொழிலாளி.

[அன்னலா—டனுகாரீ என்ற கீர்த்தனை மெட்டு.]

பல்லவி.

எல்லோரும் தொழிலாளர்—நாமினி [எல்]

அநுபல்லவி.

எல்லோரும் உழைத்து இப்புவிமீதினில்
பொல்லா வறுமைநோய் போசுங்கிச் சுகமடைய [எல்]

சரணம்.

வேண்டாத முதலாளி—வாழ்க்கைபால்
வீழ்கின்றுன்தொழிலாளி
தீண்டோமே சோம்பல் திருடரைச் சகியோம்
ஜீவானந்தம் விளங்கச்சேம நிலை துலங்க [எல்]

---

ரஷ்யக் காட்சி.

---

(தில்லையம்பலத்தல மொன்றிருக்குதாம் என்றமெட்டு.)

வடக்கே ருஷிய நாடொன்றிருக்குதாம்—
அதைக் கண்டபேர்க்கு
வாழும் புதிய சக்தி பெருக்குதாம்
அடக்கின் மனித சக்தி துள்ளுமே—அந்தத் தேசத்தார் தம்
ஆளுந்திறமைநெஞ்சையள்ளுமே [1.]

பாடுபடுவோர் தேசம் சிறக்குதாம்—அதைப் பார்த்த பேர்க்கு
பாரிற் புதிய ஞானம் பிறக்குதாம்
தேடும் பொருள்கள் யாவும் பொதுவிலே
அந்தத் தேசத்தார்க்கு
சேரும் போகமும் தழுவும் வாழ்விலே [2.]

தனி உடைமையினுலே தொல்லையாம்
அதைத் தகர்த்தபேர்க்கு
தாழ்வும் துயரும் வீழ்வுமில்லையாம்

இனி வரும் புது உலகை நோக்கினர்
அந்த தேசத்தார்கள்
என்று மனித இன்பந் தேக்கினர் [

புதுமை புதுமை இன்பலோகமே — அதன் புனிதவாழ்
பொருந்து முறையில் செய்வாய் த் யாகமே
எதுவுமடையக்கூடும் தோழனே—ரஷ்ய தேசத்தார்போல்
எழுச்சியால் சமதர்ம வீரனே. [வடக்

---

## சமதர்மத்தில் பெண்கள்

---

(கிளிக்கண்ணி)

சமதர்மக் கொடியின்கீழ் தையலரின்ப வாழ்
அமையுமுறுதியடி கிளியே
ஆண் பெண் பிரிவேதடி (1

சாண்பிள்ளையானாலுந்தான் ஆண் பிள்ளை யென்னும் ஜம்ப
வீண் பிள்ளா யென முழங்கும் கிளியே
வீர சமதர்மமாம் (2

வேலையொன்றே மதிப்பு வெட்டி யாட்டை புதிப்
சேலை வேஷ்டி பிரிப்பு கிளியே
செல்லாது சமதர்மத்தில் (3

பெண்ணடிமையென்போரை — பித்தரா்ஸ் பத்திரிக்குள் கிளியே
திண்ணெனத் தள் வதனல்
"ஜே" சமதர்மத்திற்கு (4)

பிள்ளை வளர்ப்புத்துணை — பிரசவச் சௌகரியம் கிளியே
உள்ளநற் கொள்கையடீ
ஓங்கு சமதர்மமடீ (5)

சரிநிகர் சமமென்னும் — சர்க்கரைக் கட்டிக் கொள்கை கிளியே
தெரிந்து கடைப்பிடிப்பாய்
ஜெகமொன்றாய் வாழ்வோமடீ (சமதர்ம)

---

## காதலன் வீர உரை

---

நல்வாக்கு நீ கொடடி என்ற மெட்டு.

காதற் கனிரஸமே—எந்தன்
கண்மணியே பூங்குயிலே
சாதலும் கற்கண்டடீ—சம
தர்மயுத்த வீரனென்றே 1.

அச்சம் அவ நம்பிக்கை—பழிப்
பார்ந்த சுய நன்மையெல்லாம்
துச்சமாய்த் தள்வோமடீ—வீரம்
சூழ் துணிவு கொள்வோமடீ. 2.

உற்றார் உறவினர்கள்—சொந்த
ஊர் ஜனங்கள் நேசர்களும்
கற்றாரும் தூற்றினாலும்—கொள்கை
கைவிடுவதெண்ணோமடா. 3.

ஆருயிரே! பெற்றெடுத்த—தந்தை
அன்னை மனங் கோணினாலும்
சீரிய தோழர்களும்—ஓர்கால்
சீறினு மனந்தளரோம். 4.

தூங்கிடோம் பசி பொறுப்போம்—சிறைத்
துன்பமெதையும் சகிப்போம்
எங்கா துழைப்போமடா—பூவில்
இன்ப சமதர்மத்திற்கே. 5.

தூக்குமேடை ஏறத்தயார்—சுடும்
துப்பாக்கிமுன் நிற்கத் தயார்
நோக்கம் நிறைவேறுதற்கே—எந்த
நோன்பு கொண்டிடவுந் தயார். (காதற்) 6

## சேவைக்கு அழைப்பு

(அண்ணி தயை பண்ணி என்ற மெட்டு.)

பாப்பா ஓர் சொல் கேட்பாய்—நிதம்
பரிவோ டிதம் சேர்ப்பாய்
பாவையர்கள் சமதர்மச்
சேவை செய்யும் தேவை சொல்வாய் [பாப்பா]

பெண்ணே வாழ்வின் கண்ணே—எனப்
பேசி நலம் உண்ணே
பித்தர் செய்த பெண்ணடிமை
இத்தரையிற் பொடி செய்வாய் [பாப்பா]

சாதி மத பேதம்—நம்மைத்
தாழ்த்தும் கேட நீதம்
தையலர்கள் தொழிலாளர்
உய்யும் பணி செய்யின் லாபம் [பாப்பா]

சொத்து சுகம் பொதுவே—துய்ப்பும்
தொழிலும் சமமிதுவே
தொல்லுலகத் துயர்க்கடல்
தூர்க்கும் சமதர்ம முறை [பாப்பா]

வேண்டும் தோழர் கூட்டம்—திண்ணம்
வெற்றி நம்போராட்டம்
வீராங் கனைக ளெல்லோரும்
போராட வர வழைப்பாய் [பாப்பா]

வாழ்வில் பெரும் புரட்சி—ஜல்தி
வருது புவிப் புரட்சி
வாருங்கள் சேருங்கள் வெற்றி
கூறுங்கள் என முழங்கு [பாப்பா]

---

## மத அபின்

---

(நாசக்கால தாஸி என்ற மெட்டு)

மத அபினியைத் தவிர்ப்போம் — உயர்
மதி நலம்பல குவிப்போம் — காரல்

மார்க்ஸூம் லெனினும் காட்டும் வழியில்
தீர்க்கமாக நாட்டியே மனம் [மத]

(தொகையரு)

தொன்றுதொட் டின்றவரைப் பாட்டாளியுழல்கின்ற
துயரக்கடற்கு வித்து
ஒன்று பட்டோங்க எழும் தொழிலாளராசைக்கு
உருப்படா மதம் விபத்து

(பாட்டு)

பிரிந்து பிரிந்து நைந்தார் — மத
பேத வலையில் விழுந்தார் — இனிப்
பிணங்கு மடமை தவிர்ந் தெல்லோரும்
இணங்கி வாழ முனைந்திந்நாளில் [மத]

(தொகையரு)

சோம்பேறி முதலாளி சூழ்ச்சி யட்டூழியம்
தொடர்ந்திடச் செய்யு மதமே
தேம்பியே தொழிலாளி விதிநைபு நொந்தே யழச்
செய்வதும் பாழு மதமே

(பாட்டு)

புரட்சி யுணர்ச்சி மிகுப்போம் — மத
போதனைகளைத் தகர்ப்போம் — இனிப்
பூதலந்தனி லேயுழைப்பவர்
சாதகம் பெறும் ஆட்சி படைக்க [மத]

## தொழிலாளியும் மதமும்.

(மார்க்கத்தில் கண்ட கனி என்ற மெட்டு.)

கெட்ட கேடுகளும் பட்ட பாடுகளும்
கேட்டிடிற் பல்விதமே—இங்குப்
பட்டவர்த்தனமாய்ச் சொல்லிற் பாட்டாளிக்குப்
பாதகந்தான் மதமே. 1.

புல்லுருவி போலரிப் புழுப்போன்ற
புரோகிதர்க்கே நிதமே—நலம்
சொல்லி ஏழைகட்குத் தண்டவரியிடும்
சூதர் பொறி மதமே. 2.

வஞ்சகக் குள்ளநரியெனும் பண்டிதன்
வாய் வயிற்றுக் கிதமே—தந்து
துஞ்சும் பழங்கொள்கை ஒப்பென்றெளியாரைத்
தொல்லை செய்யும் மதமே. 3.

வேர்வைசிந்தும் தொழிலாளருலகத்தை
வீழ்த்தி மிதித்ததமே—செய்யும்
சேவையே வாழ்வெனக் கொண்டிடும் செல்வர்க்கு
'ஜே' என்றிடும் மதமே 4.

மக்களை வருத்தி வாழ்விற் கொழுத்திடும்
மன்னர் தெய்வாம்சமென்றே—கூறி
எக்காலும் துக்கத்துள் வைக்கும் மதத்தாலே
ஏழையர்க்கேது நன்றே. 5.

காவாத தெய்வத்தைக் கட்டி யழுதுமே
காசைக் கரியாக்கிடும்—படி
ஓவாது பதேசம் செய்யும் மதத்தாலே
ஊன முண்டாக்கி விடும்.

இன்று வரை மதத்தாற் கஷ்டந் தீர்ந்ததோ
எண்ணிக் கடைத்தேறுங்கள்—இனி
நன்றுற வேண்டின் உழைப்பாளரே! மதம்
நாசமுறக் கூறுங்கள். (கெட்ட)

## தொழிலாளருக்கு எச்சரிக்கை.

(காமி சத்யபாமா என்ற மெட்டு)

எமாந்திடவேண்டாம் இந்தியத் தோழரே!
தோழரே தோழரே தோழரே—இன்னும் (எமா

சாமி கிருபை யென்று தவமிருந்தே யுழன்று
சேமித்த நன்மை பூஜ்ஜியம்
பூஜ்ஜியம் பூஜ்ஜியம் பூஜ்ஜியம்—இன்னும் (எ

கோவில் குளங்களாலே கொள்ளைபோச்ச ணதாலே
ஆவி சோர்ந்தின்று நைகிறோம்
நைகிறோம் நைகிறோம் நைகிறோம்—இன்னும், (எ

சடங்குக ளாலித்தேசம் சார்ந்தது சர்வநாசம்
மடங்கொண்ட வாழ்க்கை போதுமே
போதுமே போதுமே போதுமே — இன்னும் (எ

கர்மம் தலையெழுத்து கஷ்டம் மூளாத்த வித்து
மர்ம மறியா திழிந்தோம்.
இழிந்தோம் இழிந்தோம் இழிந்தோம் — இன்னும் (ஏ)

சொந்தமதி யிழந்தோம் சூழ்ச்சி நம்பத்துணிந்தோம்
வந்தபல னடிமைதான்
அடிமைதான் அடிமைதான் அடிமைதான்—இன்னும் (ஏ)

---

## சமதர்மக் கொடி.

---

(கதர்க் கப்பல் கொடி தோணுதே என்ற மெட்டு)

பல்லவி

சமதர்மக் கொடி தோணுதே—
சாரம் நிறைந்த வாழ்க்கை வீரரின் திவ்ய லக்ஷ்ய [சம]

அநுபல்லவி.

குமையும் எளியோர் துயர்க்
கொடுமையைச் சுட்டெரிக்கும்
அமையும் புது உலக
ஆட்சியைச் சித்தரிக்கும் [சம]

சரணங்கள்

பிச்சைப் பிழைப்புமில்லை
பெருந்திண்டி வாழ்க்கை யில்லை
எச்சில் நாயோடு சண்டை
யிடுந் தரித்திர மில்லை

இறவாத—இன்பம்
குறையாது—நாளும்
தரவோதும்—இங்கு
ஏழையெளியர் வாதம் [சம]

வட்டி விரியாற் கொள்ளை வாடகை லாபக் கொள்ளை
ஒட்டி உறிஞ்சுங் கொள்ளை ஊர்ப்பட்ட பகற்கொள்ளை
ஒழித்தோங்க—புவி
செழித்தோங்க—மக்கள்
விழித்தோங்க—என்றும்
வெறுமை யடிமை நீங்கச் [சம]

---

## கொள்ளைச் சிரிப்பு.

---

(நொண்டிச் சிந்து)

கொள்ளைச் சிரிப்பு வந்ததே—குப்பன்
குழவிக்கல் சாமி யென்று கும்பிட்ட போது;
பிள்ளை வரம் பெற்றிட வென்று—வள்ளி
பேராசு வேப்பமரம் சுற்றிய போது;
கள்ளை மொந்தையாகக் குடித்து—சுப்பன்
காட்டேறி ஆடுதென்று கத்திய போது;
சள்ளை தரும் பாவம் தொலைக்க—பொன்னி
சாக்கடையே தீர்த்தமென்று மூழ்கிய போது (கொ)

கொள்ளைச் சிரிப்பு வந்ததே—ராமன்
கோவிலுக்கழுது பாப்பராகிய போது;

எள்ளும் நீரும் வாரி யிறைத்து—கண்ணன்
எத்துவாளிப் பார்ப்பனனை வந்தித்த போது;
புள்ளினக் கருடனைக் கண்டு—சீதை
பூமியில் விழுந்து "கிருஷ்ணு" என்றிட்ட போது;
கள்ளக் காவி வேஷதாரிக்கே—லீலா
'கடவுள்' பணிவிடைகள் செய்திட்ட போது (கொ)

மெத்தச் சிரிப்புக்கிடந் தான்—மத
வேஷங்களும் வெறிகளும் வீம்புகளுந்தான்;
சுத்த மடச்சாதி வழக்கம்—செய்யும்
சூழ்ச்சிகளும் சேஷ்டைகளும் த்ரோகங்களுந்தான்;
புத்திகெட்ட ஆஸ்திகத்தோடு—துஷ்டப்
புரோகிதமும் தந்த மோச நாசங்களுந் தான்;
நித்தங்கேலிக்கூத்துகளாச்சே—இவை
நீங்குகின்ற நாளடிமை நீங்குகின்ற நாள். (கொ)

---

## போலித் தலைவர்கள்.

---

(காந்தி ரிஷி – நம்மை என்ற மெட்டு)

வேஷதாரி—வலை
வீச்சை உதறி யெறி [வேஷ]

நேசமுடன் சமதரும நெறியாளர் போல் நடிப்பார்
நித்தமுந் தொழிலாளர் தலைவர் பாடமும் படிப்பார்
தாசராகிப் பணக்காரர் தங்களைக் காக்காய் பிடிப்பார்
சமயோஜிதம் போலத் தான் சுயகார்யம் முடிப்பார்

தாமதமே—யின்றித்
தலைவர்களைத் தெரிவாய் [வேஷ]

கம்மிட்டி கமிஷன்களில் கனம் பெறவே சென்றவர்
காரியத்துக் குதவாது சூரரென நின்றவர்
பொம்மலாட்டமே புரிந்து புகழ் விரும்பி வென்றவர்
போகமுறும் போது தொழி லாளிகள்யா ரென்றவர்
பூரணமாய்—வேஷ
தாரிகளை வெறுப்பாய் [வேஷ]

---

## பணத்திமிர்

---

விருத்தம்.

யானைபோற் கொழுத்த மேனி;
இடர் செயும் நச்சு நெஞ்சு;
பூனை போல் திருட்டு எண்ணம்;
பொய் புலை நிறைந்த வாழ்வு;
ஏனையோர் குடி கெடுக்கும்
எத்தனம் பொழுது போக்கு;
பானை போல் வயிறு கொண்ட
பணத்திமிர் வீழ்க ! வீழ்க !!

முற்றிற்று.



# "சமதர்மம்"

ஓர் சிறந்த சுயமரியாதை

சமதர்ம வாரப்பதிப்பு.

வருட சந்தா ரு. 2—8—0

மானேஜர்:

"சமதர்மம்"

ஜோலார்பேட்டை

பகுத்தறிவு பிரஸ், ஜோலார்பேட்டை.